"மா" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (ததாமி இத்யாதி). ... ... ... ... ... ... ... ... (கூ)

மூ. — கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று
காதலால் கலிகன்றியுரைசெய்த
வண்ணவொண்டமிழொன்பதோடொன்றிவை
வல்லராயுரைப்பார் மதியந்தவழ்
விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்
மெய்ம்மைசொல்லில் வெண்சங்கமொன்றேந்திய
கண்ண! நின்றனக்கும் குறிப்பாகில்
கற்கலாம் கவியின் பொருள்தானே. (க0)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| கண்ணமங்கையுள் | திருக்கண்ணமங்கையில் |
| கண்டுகொண்டேனென்று | காணப்பெற்றேனென்று |
| கலிகன்றி | ஆழ்வார் |
| காதலால் | ப்ரீதியுடன் |
| உரைசெய்த | அருளிச் செய்ததாய், |
| வண்ணம் | காநத்தின் ஸ்வபாவமான இசையையுடைத்தாய், |
| ஒண்தமிழ் | அழகிய தமிழ்பாஷையிலேயுண்டான |
| ஒன்பதோடு ஒன்று | ஒன்பது பாசுரங்களோடுகூடிய ஒரு பாசுரமான [ளையும் |
| இவை | இப்பத்துப்பாசுரங்க |
| வல்லராய் | அப்யஸிக்க ஸமர்த்தராய்க்கொண்டு |
| உரைப்பார் | அநுஸந்திக்குமவர்கள் |
| மதி தவழ் | சந்த்ரன் ஸஞ்சரியாநின்ற |
| அம்விண்ணில் | அழகிய (போகப்ரசுரமான) ஸ்வர்க்கத்தில் போய் |
| விண்ணவராய் | தேவர்களாயிருந்து |
| மகிழ்வு எய்துவர் | ஸந்தோஷிப்பர்கள்; |
| மெய்ம்மை சொல்லில் | இதினுடைய உண்மையான ப(ஃ)லத்தைச்சொல்லப்புகில் |
| வெண்சங்கம் ஒன்று | வெண்மையாய் அத்விதீயமாயிருக்கிற ஸ்ரீ பாஞ்சஜந்யத் [தை |
| ஏந்திய | தரியாநின்ற |
| கண்ண | ஸர்வாதிகனே! |
| குறிப்பாகில் | திருவுள்ளமானால் |
| கவியின்பொருள் | இப்பாசுரங்களினர்த்தங்களை [கும்கூட |
| நின்றனக்கும் | ஸர்வஜ்ஞனான உனக் |
| கற்கலாம் | அப்யஸிக்கத் தகுந்ததாயிருக்கும். (க0) |

வ்யா. — பத்தாம்பாட்டு. (கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனென்று) ஒருதேச விசேஷத்திலேபோய் காணும் வஸ்துவை ஸம்ஸாரத்திலே திருக்கண்ணமங்கையிலே காணப்பெற்றேனென்று. (காதலால் கலிகன்றியுரைசெய்த) அபிநிவேசத்தாலே ஆழ்வாரருளிச்

செய்த. (வண்ண வொண்டமிழொன்பதோடொன்றிவை) இசையை யுடைத்தாய் அழகிதாயிருக்கிற இவைபத்தையும். (வல்லராயுரைப் பார்) அநுஸந்திப்பார்க்கு அடைவுபடச் சொல்லுகையாலுண்டான அருமையாலே வல்லராய் என்கிறார்.

(மதியந்தவழ் விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்) உபரிதநலோகங்களில் போக (பூ⁴) பூமிகளெல்லாம் புக்கு அங்குண்டான போக(பூ⁴)ங்களை புஜிப்பர்கள். (மெய்மைசொல்லில்) அர்த்ததத்வமிருந்தபடி சொல்லில். (வெண்சங்கமித்யாதி) ஐஶ்வர்யஸூசகமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் கையிலேயுடைய ஸர்வாதிகனே! உனக்கும் இதிலே ஆதரமுண்டாகில் எனக்கு சிஷ்யனாய் உனக்கும் அதிகரிக்க வேண்டும்படியாயிற்று இதினுள்ளீட்டின் கனமிருக்கிறபடி. (குறிப்பாகில்) திருவுள்ளமாகில். (கற்கலாம்) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய் இருந்திருந்தால் போகாது; என்னோடே அதிசரிக்கில் அறியலாம். ஒரு வஸிஷ்டனோடே ஸாந்தீபநியோடே தாழநின்று அதிகரிக்கக் கடவ அவனுக்குத் திருமங்கையாழ்வாரோடே அதிகரிக்கைத் தாழ்வோ?. (கO)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (கண்ணமங்கையித்யாதி) "கண்டேன்" என்னாதே "கண்டுகொண்டேன்" என்று ஒருகால் சொன்னப்போதே, ஒன்பதின்கால் சொன்னத்தால் கரைபுரண்ட காதலாய் தோற்றுகையாலே இப்படியாகைக்கு ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிறார் (ஒரு விசேஷேத்யாதி). (க) "ஸதா பஶ்யந்தி-ஸூரய:" என்னக்கடவ வஸ்துவை, இங்கேகண்டால் காதல்விளையக்குறையில்லை யென்றுகருத்து. (அநுஸந்திப்பார்க்கு) என்றவநந்தரம் "போக்யதாதிசயத்தாலே" என்றுகூட்டுவது.

நிரதிசயபோக்யபூதனை எம்பெருமானுடைய போக்யதாப்ரகர்ஷத்தை ப்ரதிபாதிக்கிற இத்திருமொழிக்கு க்ஷுத்ரமான ஸ்வர்க்காதி போகங்களை ப(2)லமாகச் சொல்லக்கூடுமோ வென்னும் சங்கையிலே "மெய்மைசொல்லித்யாதி அருளிச்செய்கிறார்" என்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (அர்த்ததத்வமித்யாதி). (அர்த்தத்வம்) புருஷார்த்த தத்வம். லோகத்திலிந்தஸாரத்தை அறியக்தக்காரில்லாமையாலே, எம்பெருமானையே முன்னிட்டு இத்திருமொழியின் பொருளின் போக்ய(பூ⁴ஷி)தை உனக்கும்கற்கும்படியிருக்குமென்கிற வழியாலே எல்லார்க்கு மித்திருமொழியைக்கற்கை பரமபுருஷார்த்தமென்று ப(2)லம் சொல்லிற்றாயிற்று என்று திருவுள்ளம். ... ... ... ... ... ... ... (கO)

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியதிருமொழி ஏழாம்பத்தில் பத்தாந்திருமொழி முற்றிற்று.

---

(க) ஸாம-உத்தர-கஅ-உ-ச.

